

# சிவ மானஸ பூஜை - திருவருள் - 003

பாவனையாலே ஈசனை வழிபடுவது மானசீக பூஜை. இதுவே மிக உயர்ந்த தவமாகும்.பாவிப்பது போதும் பரமநிலை அடையவதற்கு.இம்முறை பூசையானது ஸ்ரீக்ருஷ்ண பகவான் பாண்டவர்களுக்கு உபதேசித்தாகும். காலை மாலை இருவேளையும் பூஜைசெய்து ஈசனுடன் கலப்போமாக!

**சிவோஹம் சிவார்ப்பணம்**

# சிவ மானஸ பூஜை தமிழில்

## உறுதிமொழி ( சங்கல்பம்)

பண்: திரிகோணப்பாலை ராகம் : ஹம்சத்வனி தாளம் : ஆதி

சந்தததமும் சிந்தையினில் சங்கரனைக் கண்டுகொண்டு
மங்கள மாகவேதான் மானசீக பூஜைசெய்ய
சாம்பபர மேச்வரரை சரணமென்று நீரடைந்தால்
பூலோகம் கைவசமாய் புவனமெங்கும் ஆண்டிடுவீர்

காலாந்தரம் தன்னில் கைலாசம் சேர்ந்திடவே
மானஸபூஜை செய்யசொன்னார் புண்ணிய புருஷரும்
ஆதிசிவன் மகிமையை யாரும்அறி யார்கள்
ஆத்மாவை ஜீவன்அறி வித்தவிதம் சொல்கிறேன்.

**ஈசனை வரவழைத்தல் (ஆவாஹனம்)**

பண்:நட்டபாடை ராகம் : நாட்டை தாளம் :ஆதி

**தேகமேஆ காயமாய் சீவனே சிவனாய்**
**இதயத்தில் மலர்ந்த செந்தா மரையில்**
**புத்தியினால் அறிந்து பிரமம்தனை அடைய**
**பஞ்சபூ தங்களில் அலையுமன வாயுவை**

கண்டத்தி லேநிறுத்தி கண்ணாடி போல்விளங்கு
அண்டமெனும் பிண்டமதில் அகிலமெல்லாம் கண்டுகொண்டேன்
பதிநான்கு உலகமுடன் பலநதியும் சாகரமும்
தேவா லயமும் சிவனிருக்கும் மண்டபமும்

இருதயம் தன்னில் சகல்முமாய் பாவித்தேன்
கற்பம் பொழிந்துகன வேள்ளமாய் ஓடி
அருவிகளும் ஆறுகளும் வாய்க்காலும் ஓடைகளும்
கங்கை காவிரி யமுனை சரஸ்வதி

நதிகள் அனைத்தும் கடலில் கலந்தால்
அவைகளை பிரித்திடல் முடியாத துபோல்
முக்தி அடைந்தால் பிறவி இருக்காது
சூரியன் உதித்தால் உலகம் தோன்றும்

மாயையெனும் இருள்தள்ளி பரவெளி கண்டு
திடமாக பக்திசெய் சிவன்மேல் கருத்துடன்
சதா-சிவ னைஅறிந்து அனுபோகம் உண்டாகில்
இதுவே சிவத்யான கருணைச் சிவோகம்.

அலையுமன வாயுவைஆ றாதாரம் நிறுத்தி
மூலத்தில் அன்புடன் அம்பிகையைக் கண்டு
சோதியால் விளங்கி அமிர்தத்தில் மூழ்கி
அனாகத சக்கரத்தில் அரனை உணர்ந்து

**தேவாதி தேவன் சிவனை உமையுடனே**
**அன்பெனும் பொற்தளத் தின்மேலே அழகுபெற**
**பொன்னும் ரத்தினமும் இழைத்தசிம் மாசனத்தில்**
**இதயஅரண் மனையில் ஈசனை அமர்த்தி**

**சுயம்பிரகா சத்தாலான மாலை விளக்கெற்றி**
**மல்லிகை பூக்களால் வரிசை விளக்கேற்றி**
**ஐம்பூதக்கன் னிகையால் ஆரத்தியும் எடுத்து**
**கண்டாமணி அடித்தேன் கைலாய நாதனுக்கு**

## நீராடல் (அபிஷேகம்)

பண்: தக்கேசி ராகம் : காம்போதி தாளம் : ஆதி

**அகத்தின் உள்ளே சிவபூஜை பண்ண**
**அகத்தியர் சப்தரிஷி வேதமுனி மாதவர்கள்**
**திரளாக வந்திருந்து கலசபூ ஜைசெய்ய**
**தேவர்கள் பலரும் ருத்ரஜப கோஷமிட**

**கற்பக விருக்ஷம் கனகவர் ஷம்சொரிய**
**காமதேனு வோவாவின் பாலைப் பொழிய**
**பொற்குடத்தில் போதமுடன் பாலமிர்தம் ஏந்திவந்து**
**அம்பிகைக்கும் ஈசனுக்கும் அபிடேகம் செய்தேன்**

**தங்க கலசத்தில் தூயநீர் சொரிந்தேன்**
**கொம்பிலுள்ள தேனும் கோதிலாச் சக்கரையும்**
**காராம்பசு நெய்யும் கதலிப் பழத்துடனே**
**சேர்த்து கலந்துசிவன் முடிமீதில் பொழிந்தேன்**

கிச்சலி நார்த்தையுடன் ஏலுமிச்சை ரசமும்
சேர்த்து பிழிந்து வெள்ளிக்கிண் ணத்திலேந்தி
பலபழ ரசத்துடன் பஞ்சாமிர்தம் குழைத்து
சுந்தர சுந்தரியின் சிரசில் சொரிந்தேன்

நெல்லியுடன் நார்த்தையும் நிரையவே சாத்தி
மஞ்சளுடன் வாசனையும் மாக்காப்பு சாத்தி
பன்னீரும் சந்தனமும் பக்தியுடன் சாத்தி
கற்பூர ஹாரத்தி கைலாச நாதனுக்கு

ஏழ்சமுத் திரத்தை மனதிலே கொணர்ந்து
ஸப்த்சமுத் திரத்டை இதயத்தில் அழைத்து
அறுபத் தாறுகோடி அற்புத தீர்த்தமெலாம்
மானசீக அபிடேகம் மஹாநதி தீர்த்தமெலாம்

ருத்ராபி டேகம் ஈசனுக்கு சொரிந்து
கும்பாபி டேகம் நாதனுக்கு செய்து
பூர்ணாபி டேகம் பக்தியுடன் சொரிந்து
சங்காபி டேகம் சங்கர்க்கு செய்து

தூயகங்கா நீரினால் சுவர்னாபி டேகம்
துளிர்போன்ற பட்டால் துவட்டி மேனியை

## அலங்காரம்

பண்: பழம்பஞ்சுரம் ராகம் : சங்கராபரணம் தாளம் : ஆதி

**மாணிக்க பூஷணமும் மார்புதனில் சந்தனமும்**
**தேவரிடை மருங்கில் செம்பொன் பீதாம்பரமும்**
**அங்கியுடன் தொங்கும் அசையுமுப் புரிநூலும்**
**உத்தரீயம் அணிவித்து சால்வை போர்த்தி**

**பட்டாடை அரைஞானும் ஓட்யானக் கட்டழகும்**
**ருத்ராக்ஷ மாலை சங்கர்க்கும் சங்கரிக்கும்**
**மங்கள்மாய் பூமுடி மேல்வைது அலங்கரித்து**
**மணியிழைத்த பாதுகையும் மலரடியில் சாத்தி**

## புஷ்ப அலங்காரம்

பண்: செந்துருத்தி ராகம் : மத்யமாவதி தாளம் : ஆதி

**பச்சைமரிக் கொழ்ந்தும் பாரிஜாத மலரும்**
**மட்டற்றவேர்க் கொழுந்தும் மணமுள்ள மல்லிகையும்**
**வில்வத்தில் கோடி பர்வதம்போல் குவித்தேன்**
**சங்கரிக்கும் சங்கரனுக்கும் சாற்றியலங் கரித்தேன்.**

## ப்ரசாதம்

**சாம்பிராணி தூபதீபம் நாயகிக்கும் நாதனுக்கும்**
**வாசனையாய் எடுத்தேன் அன்புடன் துதித்தேன்**
**கண்டாமணி அடித்தேன் கைலாய நாதனுக்கு**
**தூய நீராலே சுற்றினேன் பிரசாதத்தை**

பூரண்ரும் கௌரியுடன் புசித்து மகிழ்ந்தபின்
பன்னீரால் வாயலம்பி பட்டாலே துடைத்து
பொன்னான தட்தனில் சீவலுடன் வேற்றிலை
சாதிக்காய் ஏலமுடன் ஜாதிபத்ரி லவங்கம்

நீருடனே வால்மிளகு பச்சைக் கற்பூரம்
குங்குமபூ மற்றும் தாம்பூலம் தாங்கொடுத்து
புணர்பூசை பண்ணி போற்றிப் பணிந்தேன்
பார்வதி நாதரை ஐக்கியம் அடைந்தேன்.

திருச்சிற்றம்பலம

